OL/2015/81-T-I,II





**81 T I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2015 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2015 டிசெம்பர்
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2015**

| | | |
|---|---|---|
| කෘෂිකර්මය හා ආහාර තාක්ෂණය I, II | | පැය තුනයි |
| விவசாயமும் உணவுத் தொழினுட்பவியலும் I, II | | மூன்று மணித்தியாலம் |
| Agriculture and Food Technology I, II | | Three hours |

## விவசாயமும் உணவுத் தொழினுட்பவியலும் I

**கவனிக்க :**
(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் பிறபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** பின்வருவனவற்றுள் இலங்கையில் அதிக பரப்பளவில் செய்கை பண்ணப்பட்டுள்ள பயிர்,
(1) தேயிலையாகும். (2) தென்னையாகும். (3) இறப்பராகும். (4) நெல்லாகும்.

**2.** நபர்களின் தொழிலுக்கேற்ப அவர்களின் போசணைத் தேவையும் வேறுபடும். பின்வருவோரில் சக்தி தரும் உணவுகள் அதிகம் தேவைப்படும் நபர்கள்,
(1) பாடசாலைப் பருவப் பிள்ளைகள். (2) கடினவேலை செய்யும் ஆண்கள்.
(3) பாலூட்டுந் தாய்மார்கள். (4) இளம்பருவப் பெண்கள்.

**3.** பண்டைய அரசர் காலத்தில் இலங்கை உணவில் தன்னிறைவு பெற்றுக் காணப்பட்டமைக்கான பிரதான காரணம்,
(1) அக்காலத்தில் உயர் நீர்வளத் தொழினுட்பவியல் பயன்படுத்தப்பட்டமையாகும்.
(2) கலப்புப் பிறப்பினப் பயிர்கள் செய்கை பண்ணப்பட்டமையாகும்.
(3) நோய் பீடைக்கான எதிர்ப்புத்தன்மை கொண்ட பயிர்ப் பேதங்கள் உருவாக்கப்பட்டமையாகும்.
(4) இரசாயனப் பசளைகள் பயன்படுத்தப்படாது பயிர்கள் செய்கை பண்ணப்பட்டமையாகும்.

**4.** இலங்கையின் விவசாயத்துக்கு, குளங்களினால் ஆற்றப்படும் பணி அளப்பரியதாகும். குளத்திலிருந்து மேலதிக நீரை வெளியேற்றுவதற்கான கட்டமைப்பு,
(1) அலைதாங்கியாகும். (2) கலிங்கற்றொட்டியாகும். (3) சுருங்கையாகும். (4) கலிங்காகும்.

**5.** விவசாயியொருவர் பயிர்ச்செய்கையை ஆரம்பிப்பதற்கென வித்துகளைத் தெரிவுசெய்து, அவற்றை 12 மணித்தியாலம் நீரில் ஊறவிட்டு, வயலில் நாட்டினார். இவ்வாறு வித்துகளை நீரில் ஊறவிடுவதன் நோக்கம்,
(1) நோய்க்கட்டுப்பாடாகும். (2) பூச்சிப்பீடைக் கட்டுப்பாடாகும்.
(3) முளைத்தலைத் தூண்டுதலாகும். (4) வரட்சியைத் தாங்கும் தன்மையை ஏற்படுத்தலாகும்.

**6.** வளிமண்டல சாரீரப்பதன், பயிர்ச்செய்கையில் செல்வாக்குச் செலுத்தும் காரணியாகும். வளிமண்டல சாரீரப்பதன் அதிகரிக்கும்போது,
(1) தாவர ஆவியுயிர்ப்பு வீதம் அதிகரிக்கும்.
(2) தாவர நோய், பீடைகள் ஆகியவற்றின் பாதிப்பு அதிகரிக்கும்.
(3) தாவர வேர்களினால் நீரின் அகத்துறிஞ்சல் அதிகரிக்கும்.
(4) தானிய விளைச்சலின் களஞ்சிய காலம் அதிகரிக்கும்.

**7.** பல்வேறு காரணிகளின் செல்வாக்குக் காரணமாக தாய்ப்பாறைகள் வானிலையாலழிதலுக்குட்பட்டு தாய்ப்பாறைப் பதார்த்தம் (மண்மூலம்) உருவாகும். இந்த தாய்ப்பாறைப் பதார்த்தம் மண் பக்கப்பார்வையில் எந்த வலயத்தில் காணப்படும்?
(1) A வலயம் (2) B வலயம் (3) C வலயம் (4) O வலயம்

**8.** மாணவரொருவர் பூச்சாடியொன்றில் மிளகாய் நாற்றொன்றை நாட்டி அதற்கு அதிக நீரை ஊற்றினார். சாடியின் அடியிலிடப்பட்டிருந்த துளைகளினூடாக மேலதிக நீர் வடிந்த பின்னர் அம்மண்ணில் அடங்கியுள்ளது / அடங்கியுள்ளவை,
(1) மயிர்த்துளை நீரும் புவியீர்ப்பு நீருமாகும். (2) பருகு நீரும் புவியீர்ப்பு நீருமாகும்.
(3) பருகு நீரும் மயிர்த்துளை நீருமாகும். (4) பருகு நீர் மட்டுமாகும்.

[பக். 2 ஐப் பார்க்க

**9.** விவசாயியொருவர், தனது ஒரு மாத வயதுப் பருவக் காய்கறிச் செய்கைக்கு நைதரசன் பசளையை இட்டு நீர்ப்பாசனம் செய்தார். சிறிது நேரத்தின் பின்னர் பலத்த மழை பெய்ததனால் அனைத்துப் பசளைகளும் கழுவியெடுத்துச் செல்லப்பட்டிருக்கும் என அவர் கவலையடைந்தார். எனினும், சில நாட்களின் பின் பயிர்கள் செழிப்பாக வளர்ந்திருக்கக் காணப்பட்டதை அவதானித்தார். இதிலிருந்து, விவசாயியினால் இடப்பட்ட பசளை முழுவதும் கழுவியெடுத்துச் செல்லப்படவில்லை என்பது உறுதியானது. இந்தத் தோற்றப்பாட்டுக்குக் காரணமாக அமைவது,

(1) மண் கற்றயன் மாற்றீடாகும். (2) மண் கட்டமைப்பாகும்.
(3) மண் pH பெறுமானமாகும். (4) மண் இழையமைப்பாகும்.

**10.** சூழலுக்கு உவப்பான பயிர்ச்செய்கையின்போது பீடைத்தாக்கத்தைக் குறைப்பதற்கெனப் பயன்படுத்தத்தக்க வெறுப்பூட்டுந் தாவர வகைகளாவன,

(1) சிறகவரையும் பயறும். (2) செவ்வந்தியும் சூரியகாந்தியும்.
(3) காசித்தும்பையும் இக்சோராவும். (4) கத்தரியும் வெண்டியும்.

**11.** மாணவரொருவர், கனிந்த தக்காளிப் பழத்திலிருந்து பெறப்பட்ட வித்துகளை, எவ்வித பரிகரிப்பும் **செய்யாது** நாற்றுமேடையிலிட்டபோது, அவை உரிய காலத்தில் முளைக்கவில்லை. இதற்கான காரணம் அந்த வித்துகளில்,

(1) தடித்த வித்துறை காணப்பட்டமையாகும். (2) நீர் புகவிடா வித்துறை காணப்பட்டமையாகும்.
(3) நிரோதிப்புப் பதார்த்தங்கள் காணப்பட்டமையாகும். (4) முளையம் உறங்குநிலையில் காணப்பட்டமையாகும்.

**12.** பெத்திரிக்கிண்ண முறையில் வித்து முளைதிறன் சதவீதத்தைத் துணியும் பரிசோதனைக்கென 80 வித்துகள் பயன்படுத்தப்பட்டன. அவற்றுள் 60 வித்துகள் முளைத்திருக்கக் காணப்பட்டன. எனவே, இந்த வித்துமாதிரியின் முளைதிறன் சதவீதம்,

(1) 45% (2) 60% (3) 75% (4) 85%

**13.** தாவர ஒட்டுமுறைக்கென ஒட்டுமுளையொன்றைத் தெரிவுசெய்யும்போது கவனத்திற் கொள்ள வேண்டிய விடயங்கள் தொடர்பான கூற்றுகள் மூன்று வருமாறு,

A - உயர் பண்புகள் கொண்ட தாய்த்தாவரத்திலிருந்து பெறப்பட வேண்டும்.
B - ஒட்டுக்கட்டைத் தாவரத்தின் குடும்பத்தைச் சேர்ந்த தாவரத்திலிருந்து பெறப்பட வேண்டும்.
C - உறுதியான வேர்த்தொகுதியைக் கொண்ட தாவரமாகக் காணப்பட வேண்டும்.

இவற்றுள் சரியான கூற்றுகள்,

(1) A, B ஆகியன (2) A, C ஆகியன (3) B, C ஆகியன (4) A, B, C ஆகிய எல்லாம்

**14.** நிலம்பண்படுத்தல் உபகரணங்கள் தொடர்பான விவரங்கள் கீழே அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

| | **முதற்பண்படுத்தல் உபகரணங்கள்** | **துணைப்பண்படுத்தல் உபகரணங்கள்** | **இடைப்பண்படுத்தல் உபகரணங்கள்** |
|---|---|---|---|
| A | மண்வெட்டி | மும்முனைப் பண்படுத்தி | வட்டத்தட்டு ஹரோ |
| B | கைமுள்ளு | வட்டத்தட்டுக் கலப்பை | ஜப்பானிய சுழல்களைகட்டி |
| C | மிதிமுள்ளு | வட்டத்தட்டு ஹரோ | சொப்பிங் ஹோ |
| D | வட்டத்தட்டுக் கலப்பை | இறகு கலப்பை | வட்டத்தட்டு ஹரோ |

மேலேயுள்ள அட்டவணையில், நிலம்பண்படுத்தல் சந்தர்ப்பங்களுக்கமைய முறையே உபகரணங்களைச் சரியாகக் கொண்ட நிரை,

(1) A ஆகும். (2) B ஆகும். (3) C ஆகும். (4) D ஆகும்.

**15.** பயிர் விளைச்சல்களைச் சீராகத் தயார்செய்து, சந்தைக்கு அனுப்புவதன் மூலமாக விளைச்சல் இழப்பு குறைவடைவதனால் விவசாயிகளுக்கு அதிக வருமானம் கிடைக்கும். விவசாய விளைபொருள்களை பயிர்செய் நிலத்திலிருந்து சந்தை வரை அனுப்பும் செயற்றொடரின் சரியான ஒழுங்குமுறையைக் கொண்ட விடை யாது?

(1) சுத்தஞ்செய்தல், தெரிவு செய்தல் → தரப்படுத்தல் → பொதியிடல் → கொண்டுசெல்லல்
(2) தரப்படுத்தல் → சுத்தஞ்செய்தல், தெரிவு செய்தல் → பொதியிடல் → கொண்டுசெல்லல்
(3) தெரிவுசெய்தல், தரப்படுத்தல் → சுத்தஞ்செய்தல் → கொண்டுசெல்லல் → பொதியிடல்
(4) சுத்தஞ்செய்தல் → கொண்டுசெல்லல் → தரப்படுத்தல் → பொதியிடல்

**16.** துணைப்பண்படுத்தலின் நோக்கங்களாவன,

(1) மண்ணைப் புரட்டுதலும் தூர்வையாக்கலும். (2) மண்ணைத் தூர்வையாக்கலும் மட்டப்படுத்தலும்.
(3) களைக்கட்டுப்பாடும் தூர்வையாக்கலும். (4) மண்ணைப் புரட்டுதலும் களைக்கட்டுப்பாடும்.

**17.** ஒட்டு மாங்கன்று, உருளைக்கிழங்கு ஆகியவற்றை நாட்ட உகந்த பாத்தி வகைகள் முறையே,

(1) உயர்பாத்தி, தாழ்பாத்தி (2) வரம்புசால் பாத்தி, தாழ்பாத்தி
(3) தாழ்பாத்தி, தனிநடுகைக் குழி (4) தனிநடுகைக் குழி, வரம்புசால் பாத்தி

**18.** வயலில் நாட்டும்போது, நாற்றுகளின் வேர்களுக்கு ஏற்படத்தக்க சேதத்தைக் குறைக்கும் நோக்கில் தயார் செய்யப்படும் நாற்றுமேடை வகை,

(1) சேற்று நாற்றுமேடையாகும். (2) டபொக் நாற்றுமேடையாகும்.
(3) பாத்தி நாற்றுமேடையாகும். (4) நெரிடோக்கோ நாற்றுமேடையாகும்.

**19.** நான்மடியச் சுழற்சிமுறைப் பயிர்ச்செய்கை முறையில் பயிரிட மிக உகந்த பயிர்களை ஒழுங்குமுறையில் கொண்ட விடை எது?

(1) மிளகாய், வெண்டி, சோளம், கௌபீ (2) சோளம், பயறு, வற்றாளை, வெண்டி
(3) வாழை, கௌபீ, மரவள்ளி, சிறகவரை (4) பப்பாசி, மிளகாய், பீர்க்கு, சோளம்

/பக். 3 ஐப் பார்க்க

**20.** பல்படைப் பயிர்ச்செய்கை முறையில் வீட்டுத்தோட்டத்தில் பயிர்ச்செய்கையை மேற்கொள்ளும்போது வீட்டுக்கு மிகத் தொலைவில் வேலியோரத்துக்கு அண்மையில் நாட்ட மிக உகந்த பயிர்களைக் கொண்ட தொகுதி எது?
(1) கராம்பு, மிளகு, வாழை
(2) எலுமிச்சை, மாதுளை, கொய்யா
(3) வல்லாரை, கத்தரி, பப்பாசி
(4) பலா, தூரியன், மா

**21.** மண்ணின்றிய பயிர்ச்செய்கையில், நடுகை ஊடகமாக தும்புத்தூளைப் பயன்படுத்த முன் அது கொதிநீராவியில் அவிக்கப்பட வேண்டுமெனச் சிபாரிசு செய்யப்படுகிறது. இதற்கான காரணம்,
(1) நீர்வடிப்பை விருத்திசெய்தலாகும்.
(2) காற்றூட்டத்தை விருத்திசெய்தலாகும்.
(3) நோயாக்கிகளை அழித்தலாகும்.
(4) பாதகமான இரசாயனப் பதார்த்தங்களை அகற்றுதலாகும்.

**22.** பின்வருவனவற்றுள் அகன்ற இலைக் களைகளை **மாத்திரம்** கொண்ட விடை எது?
(1) விடேலியா, தொட்டாற் சுருங்கி, ஜப்பானிய ஜக்கோணியா
(2) இலுக், ஹந்தப்பான, சீதேவியார் செங்கழுநீர்
(3) மஞ்சட் கோரை, சிறுகோரை, மானாப்புல்
(4) கடுக்கன் புல், குதிரைவாற் புல், பாத்தீனியம்

**23.** வாழை உறிஞ்சியின் இலைகள் சிறிதாகி கொத்துமுனையாக மாறியிருந்ததுடன் உறிஞ்சியின் வளர்ச்சியும் குன்றியது. இந்த நிலைமைக்கான காரணம்,
(1) பற்றீரியாத் தொற்று. (2) வைரசுத் தொற்று. (3) பங்கசுத் தொற்று. (4) வட்டப்புழுத் தொற்று.

**24.** இலங்கையில் நடைபெறும் மண்ணரிப்பிற்கான பிரதான காரணி,
(1) கடலலையாகும்.
(2) ஓடும் நீராகும்.
(3) வேகமாக வீசும் காற்றாகும்.
(4) விலங்குகளின் தொழிற்பாடாகும்.

**25.** பௌதிக நிலப் பயன்பாட்டு வகைப்படுத்தலுக்கு அமைய, மிக அதிக சாய்வுடைய நிலங்களில் செய்கை பண்ணுவதற்கெனச் சிபாரிசு செய்யப்படுவது,
(1) பெருந்தோட்டப் பயிர்களாகும்.
(2) மேய்ச்சற் புல்லாகும்.
(3) வனச் செய்கையாகும்.
(4) பழப் பயிர்களாகும்.

**26.** பின்வருவனவற்றுள் குறை பசளைக் கலவை எது?
(1) நெற்செய்கைக்கான அடிக்கட்டுப் பசளை
(2) நெற்செய்கைக்கான மேற்கட்டுப் பசளை
(3) அலன் கூப்பர் கலவை
(4) அல்பேர்ட் கலவை

**27.** உருவில் காட்டப்பட்டுள்ள நீர்ப்பாசன முறை,
(1) சால்முறை நீர்ப்பாசனமாகும்.
(2) நிரல்முறை நீர்ப்பாசனமாகும்.
(3) மோதிரமுறை நீர்ப்பாசனமாகும்.
(4) பாத்திமுறை நீர்ப்பாசனமாகும்.



**28.** இலங்கையின் உலர்வலயப் பற்றைக் காடுகளைக் கொண்ட தரைகளில், குறைந்த செலவுடன் திறந்தவெளி வளர்ப்பு முறையில் வளர்க்கத்தக்க பண்ணை விலங்கு வகை,
(1) எருமைமாடு ஆகும். (2) ஆடு ஆகும். (3) கோழி ஆகும். (4) பன்றி ஆகும்.

**29.** பின்வரும் அட்டவணையில் விலங்கு வகைகள், அவற்றுக்கு அதிகளவில் ஏற்படும் நோய்கள், அந்நோய்களுக்குரிய நோய்க்காரணி வகை ஆகியன குறிப்பிடப்பட்டுள்ளன.

| | **விலங்கு வகை** | **நோய்** | **நோய்க்காரணி வகை** |
|---|---|---|---|
| A | மாடு | மடியழற்சி | பங்கசு |
| B | கோழி | ரணிக்கேற் | வைரசு |
| C | மாடு | கால்வாய் நோய் | பற்றீரியா |
| D | கோழி | அந்திரக்ஸ் | வைரசு |

மேலேயுள்ள அட்டவணையில் சரியாக அமைந்துள்ள வரிசை (நிரை),
(1) A ஆகும். (2) B ஆகும். (3) C ஆகும். (4) D ஆகும்.

/பக். 4 ஐப் பார்க்க

26548

**30.** பால்கறக்கும் நிலையிலுள்ள பசுவிற்கு, 60 நாட்கள் நியம உலர்காலம் (வற்றுக்காலம்) வழங்கப்படுவது தொடர்பான கூற்றுகள் சில வருமாறு

A - அடுத்துப் பிறக்கவுள்ள கன்றுக்குத் தேவையான போசணையைப் பெற்றுக்கொள்ள இடமளித்தல்.
B - அடுத்த கன்றீனலை இலகுவாக்கல்.
C - கறவைப் பசு நலிவடைவதைத் தவிர்த்தல்.

இவற்றுள் சரியானவை

(1) A, B ஆகியன
(2) A, C ஆகியன
(3) B, C ஆகியன
(4) A, B, C ஆகிய எல்லாம்

**31.** பூக்க அண்மித்த நிலையிலுள்ள புல்லை வெட்டிக் கொண்டுவந்து அதன் பச்சை நிறம் பாதுகாக்கப்படும் வகையில் மிதமான காற்றில் உலர்த்திச் சேமிக்கப்படும் மாடுகளுக்கான உணவு,

(1) உலர் புல்லாகும்.
(2) குழிகாப்புத் தீனாகும்.
(3) வெட்டுப் புல்லாகும்.
(4) மேய்ச்சற் புல்லாகும்.

**32.** கத்தரிச் செய்கையினைத் தாக்கும் காய், தண்டு ஆகியவற்றைத் துளைக்கும் புழுவைக் கட்டுப்படுத்த மேற்கொள்ளப்படும் சிபாரிசு,

(1) தொடுகைப் பூச்சிநாசினியை விசிறுதலாகும்.
(2) சவர்க்காரக் கரைசலை விசிறுதலாகும்.
(3) தொகுதிப் பூச்சிநாசினியை விசிறுதலாகும்.
(4) செவ்வெறும்புகளை அறிமுகஞ் செய்தலாகும்.

**33.** பின்வரும் உணவுத் தொகுதிகளில், அதிக விற்றமின் A யைக் கொண்டது,

(1) நெல்லி, தோடை, பப்பாசி, மா
(2) தக்காளி, பயறு, சோயா அவரை, குரக்கன்
(3) நிலக்கடலை, தவிட்டரிசி, அன்னாசி, மீன் ஈரல்
(4) கரட், பப்பாசி, முட்டை மஞ்சட்கரு, கீரை வகைகள்

**34.** தயிரின் உற்பத்திச் செயன்முறையின் படிமுறைகளை சரியான ஒழுங்கில் கொண்ட விடை யாது?

(1) வடித்தல் → பாச்சராக்கல் → உறை சேர்த்தல் → பாத்திரங்களில் கலவையை ஊற்றுதல் → நொதிக்கவிடல்
(2) உறை சேர்த்தல் → வடித்தல் → பாச்சராக்கல் → பாத்திரங்களிலிடல் → நொதிக்கவிடல்
(3) பாச்சராக்கல் → வடித்தல் → பாத்திரங்களிலிடல் → உறை சேர்த்தல் → நொதிக்கவிடல்
(4) வடித்தல் → உறை சேர்த்தல் → பாச்சராக்கல் → பாத்திரங்களிலிடல் → நொதிக்கவிடல்

**35.** பயிர்செய் நிலத்திலிருந்து மேலதிக நீரை அகற்றுவதற்கென இடப்படும் வடிகாற் தொகுதி உருவில் காட்டப்பட்டுள்ளது. இது,

(1) கிறிட்டு அயன் முறையாகும்.
(2) சமாந்தர முறையாகும்.
(3) ஹெரிங் மீன்முள்ளு முறையாகும்.
(4) கொடொல் வடிகாலாகும்.

**36.** A, B, C, D எனப் பெயரிடப்பட்ட மண்மாதிரிகள் நான்கின் கற்றயன் மாற்றீட்டுக் கொள்ளளவுகள் 100g மண்ணிற்கு முறையே 20, 24, 30, 35 மில்லி சமவலு ஆகும். இவற்றுள் மிக வளமான மண்ணாகக் கருதத்தக்கது,

(1) A ஆகும்.
(2) B ஆகும்.
(3) C ஆகும்.
(4) D ஆகும்.

**37.** பப்பாசிக் காய்களை அறுவடைசெய்ய மிகச் சிறந்த சந்தர்ப்பமாக அமைவது,

(1) தோலின் நிறம் பச்சையிலிருந்து மஞ்சளாக மாறும் போதாகும்.
(2) தோல் பளபளப்பாக உள்ள போதாகும்.
(3) தோலில் இடையிடையே வெடிப்புகள் ஏற்படும் போதாகும்.
(4) காய் தண்டுடன் இணையும் பகுதி மஞ்சள் நிறமாக மாறும் போதாகும்.

**38.** தாயிலிருந்து வேறுபிரித்து வளர்க்கப்படும் பசுக்கன்றுக்கு பால் வழங்கப்பட வேண்டிய அளவு, கன்றின் உடல் நிறையின்,

(1) 6 % ஆகும்.
(2) 10 % ஆகும்.
(3) 15 % ஆகும்.
(4) 18 % ஆகும்.

**39.** கனகூளமுறையில் கோழி வளர்ப்பினை மேற்கொள்ளும்போது பயன்படுத்தப்படும் கனகூளத்துக்கு இருக்க வேண்டிய இயல்புகளாவன,

(1) துகள்களாகக் காணப்படலும் ஈரலிப்பை அகத்துறிஞ்சலும்.
(2) பெரிய துண்டுகளாகக் காணப்படலும் கூரிய விளிம்புகளைக் கொண்டிருத்தலும்.
(3) சிறிய துண்டுகளாகக் காணப்படலும் கோழிகளின் உணவாக அமைந்திராமையும்.
(4) சிறிய துண்டுகளாகக் காணப்படலும் கோழிகளுக்கு உணவாக அமைதலும்.

**40.** மாணவரொருவர் சந்தையில் பால்பைக்கற் ஒன்றைக் கொள்வனவு செய்தார். அதன் சுட்டுத்துண்டில் (லேபலில்) UHT எனப் பொறிக்கப்பட்டிருந்ததுடன் திறந்த பின்னர் அதனைக் குளிரூட்டியில் வைக்க வேண்டுமெனவும் குறிக்கப்பட்டிருந்தது. இதில் அடங்கியுள்ளது,

(1) பாச்சராக்கம் செய்யப்பட்ட பாலாகும்.
(2) கிருமியழிக்கப்பட்ட பாலாகும்.
(3) நற்காப்புச் செய்யப்படாத பாலாகும்.
(4) கொழுப்பு அகற்றப்பட்ட பாலாகும்.

* *

/பக். 5 ஐப் பார்க்க

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

81 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2015 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2015 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2015

කෘෂිකර්මය හා ආහාර තාක්ෂණය I, II
விவசாயமும் உணவுத் தொழினுட்பவியலும் I, II
Agriculture and Food Technology I, II

## விவசாயமும் உணவுத் தொழினுட்பவியலும் II

※ **முதலாம்** வினாவையும் எவையேனும் வேறு **நான்கு** வினாக்களையும் தெரிவுசெய்து எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு **மாத்திரம்** விடை எழுதுக.

**1.** விவசாய முயற்சிகளிலிருந்து அதிக அனுகூலங்களைப் பெற்றுக்கொள்வதற்கு நிலத்தின் நீடித்த நிலைப்பு, கால்நடை வளர்ப்பு, பயிர்ச்செய்கை முகாமைத்துவ நடைமுறைகள் ஆகியன பற்றி அதிக கவனம் செலுத்த வேண்டும்.

(i) பயிர்ச்செய்கைக்கென ஆரம்ப நிலம்பண்படுத்தலை மேற்கொள்வதனால் கிடைக்கும் அனுகூலங்கள் **இரண்டு** எழுதுக.

(ii) (a) 'மண்ணரிப்பு' என்றால் என்ன?
(b) மட்காப்புக்கெனப் பயன்படுத்தப்படும் விவசாய முறைகள் **இரண்டு** எழுதுக.

(iii) (a) பயிர்ச்செய்கையில் நீர்ப்பாசனம் என்றால் என்ன?
(b) பயிர்ச்செய்கையில் பயன்படுத்தப்படும் மேற்பரப்பு நீர்ப்பாசன முறைகள் **இரண்டைப்** பெயரிடுக.

(iv) மண்ணீர்க் காப்புக்கென மேற்கொள்ளத்தக்க நடைமுறைகள் **இரண்டு** எழுதுக.

(v) (a) வித்து முளைத்தலுக்குத் தேவையான காரணிகள் **இரண்டைக்** குறிப்பிடுக.
(b) 'வித்து உறங்குநிலை' என்றால் என்ன?

(vi) (a) குக்கர்பிற்றேசியேக் குடும்பப் பயிர்களின் காய்களுக்கு அதிகளவில் பாதிப்பை ஏற்படுத்தும் பூச்சிப் பீடையொன்றைப் பெயரிடுக.
(b) அந்த பூச்சியினால் அக்காய்களுக்கு ஏற்படுத்தப்படும் பாதிப்பின் தன்மையை விளக்குக.

(vii) இலங்கையின் உலர்வலயத்தில் வளர்க்கப் பொருத்தமானதெனச் சிபாரிசு செய்யப்படும் கறவை மாட்டு வர்க்கங்கள் **இரண்டு** எழுதுக.

(viii) நுண்ணங்கிகளைப் பயன்படுத்தி தயாரிக்கப்படும் பாலுணவு வகைகள் **இரண்டைப்** பெயரிடுக.

(ix) (a) பற்றீரியா மூலம் கோழிகளுக்கு அதிகளவில் ஏற்படும் நோயொன்றைப் பெயரிடுக.
(b) அந்நோயின் நோயறிகுறிகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(x) (a) கனகூள முறையில் கோழிவளர்ப்பை மேற்கொள்வதன் அனுகூலங்கள் **இரண்டு** எழுதுக.
(b) புரதத்தை வழங்குவதற்கென, கோழியின் உணவுப் பங்கீட்டுடன் சேர்க்கப்படத்தக்க உணவுப் பொருட்கள் **இரண்டு** எழுதுக.

**2.** வித்துகளினாலன்றி ஏனைய தாவரப்பாகங்களின் மூலம் புதிய தாவரங்களை உருவாக்கல் பதியமுறை இனப்பெருக்கலாகும்.

(i) பதியமுறை இனப்பெருக்கத்தின் அனுகூலங்கள் **நான்கை** எழுதுக.

(ii) ஒட்டுதலின்போது ஒட்டுக்கட்டையாகப் பயன்படுத்தப்படும் தாவரத்தில் காணப்பட வேண்டிய இயல்புகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(iii) மாஞ்செடியில் ஆப்பொட்டினை மேற்கொள்ளும் விதத்தை பெயரிடப்பட்ட வரிப்படங்களின் உதவியுடன் விவரிக்குக.

(iv) தண்டுத்துண்டங்களில் வேர்விடலைத் தூண்டுவதற்கெனப் பயன்படுத்தப்படும் பதார்த்தங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

[பக். 6 ஐப் பார்க்க

**3.** வெற்றிகரமான பயிர்ச்செய்கைக்கு களைக்கட்டுப்பாடு மிக இன்றியமையாததாகும்.

(i) (a) களைகளின் பொதுவான இயல்புகள் **நான்கைக்** குறிப்பிடுக.

(b) களைகளினால் பயிர்களுக்கு ஏற்படும் பாதிப்புகள் **நான்கு** எழுதுக.

(ii) ஒன்றிணைந்த களைக்கட்டுப்பாட்டின் அனுகூலங்கள் **இரண்டு** எழுதுக.

(iii) பின்வருவனவற்றைச் சுருக்கமாக விளக்குக.

(a) வெளிநாட்டிலிருந்து அறிமுகமாகிய ஆக்கிரமிப்புக் களைகள்

(b) தொடுகைக் களைநாசினிகள்

**4.** பொதுவாக, பயிர்களுக்கான பசளைப் பிரயோகம் மண்ணிற்கு மேற்கொள்ளப்படுவதுடன் சில சந்தர்ப்பங்களில் திரவப் பசளைகளாக இலைகளுக்குப் பிரயோகிக்கப்படும்.

(i) பயிர்ச்செய்கையின்போது மண்ணுக்கு இரசாயனப் பசளைகள் இடப்படும் முறைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ii) பயிர்ச்செய்கையின்போது மண்ணுக்கு இடப்படும் இரசாயனப் பசளை வகைகளின் வினைத்திறனை அதிகரிக்க மேற்கொள்ளக்கூடிய **நான்கு** நடவடிக்கைகளை எழுதுக.

(iii) (a) 'தனிப்பசளை', 'கலவைப் பசளை' ஆகியன என்றால் என்னவென விளக்கி அவற்றுக்கான உதாரணம் ஒவ்வொன்றைக் குறிப்பிடுக.

(b) வீட்டில் தயாரித்துக்கொள்ளக் கூடிய இயற்கைத் திரவப் பசளை வகைகள் **இரண்டைப்** பெயரிடுக.

**5.** பயிர்களில் வெளிக்காட்டப்படும் நோய் அறிகுறிகளின் அடிப்படையில் தாவரங்களுக்கு ஏற்பட்டுள்ள நோய்களை இனங்காணலாம்.

(i) (a) பயிர்களுக்கு ஏற்படும் பங்கசு நோய்களின் பொதுவான இயல்புகள் **நான்கைக்** குறிப்பிடுக.

(b) நெற்செய்கைக்குப் பாதிப்பை ஏற்படுத்தும் பங்கசு நோய்கள் **இரண்டைப்** பெயரிடுக.

(ii) தாவர நோய்கள் ஏற்படுவதைத் தவிர்ப்பதற்கு (தடுப்பு) மேற்கொள்ளக்கூடிய நடவடிக்கைகள் **நான்கினைக்** குறிப்பிடுக.

(iii) (a) சொலனேசியேக் குடும்பப் பயிர்களுக்கு நாற்றுமேடைப் பருவத்தில் அதிகளவில் ஏற்படும் நோயைப் பெயரிடுக.

(b) அந்நோயின் நோயறிகுறிகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(c) அந்த நோயைத் தவிர்ப்பதற்கு மேற்கொள்ளத்தக்க நடவடிக்கைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

**6.** விவசாயத்தில் அதிக விளைச்சலைப் பெறும் நோக்கில் பல்வேறு பயிர்ச்செய்கை முறைகள் மேற்கொள்ளப்படுகின்றன.

(i) (a) 'ஒன்றிணைந்த விவசாயம்' என்றால் என்ன?

(b) ஒன்றிணைந்த விவசாயத்தின் அனுகூலங்கள் **நான்கைக்** குறிப்பிடுக.

(ii) விவசாய வனச்செய்கையின் முக்கியத்துவங்கள் **நான்கைக்** குறிப்பிடுக.

(iii) (a) ஆளுகை நிபந்தனைகளின் கீழே பயிர்ச்செய்கையை மேற்கொள்வதன் அனுகூலங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(b) ஆளுகை நிபந்தனைகளின் கீழான பயிர்ச்செய்கையின்போது பயன்படுத்தப்படும் இல்ல வகைகள் **இரண்டைப்** பெயரிடுக.

**7.** விலங்கு வளர்ப்பில் சிறப்பான முகாமைத்துவத்தின் மூலமாக அதிக பொருளாதார அனுகூலங்களைப் பெற முடியும்.

(i) (a) மாடுவளர்ப்பில் 'செயற்கைமுறைச் சினைப்படுத்தல்' என்றால் என்ன?

(b) செயற்கைமுறைச் சினைப்படுத்தலின் அனுகூலங்கள் **நான்கு** தருக.

(ii) (a) கோழிவளர்ப்பில், பொருத்தமற்ற பறவைகளை நீக்குவதன் (கழித்தல்) அனுகூலங்கள் **நான்கைக்** குறிப்பிடுக.

(b) அடைவைக்கவெனத் தெரிவுசெய்யும் முட்டைகளில் காணப்பட வேண்டிய இயல்புகள் **நான்கைக்** குறிப்பிடுக.

(iii) கோழிகளுக்கு ஏற்படும் கொக்சிடியோசிசு நோயின்,

(a) நோய்க்காரணி

(b) நோயறிகுறிகள் **இரண்டு**

(c) நோய்க்கட்டுப்பாட்டு முறைகள் **இரண்டு**

ஆகியவற்றைக் குறிப்பிடுக.

* * *